13th September 1958]

தாக சொன்னார்கள். இதற்காக அவர்களுடைய சீப் இஞ்சீனீயரை கேட்டு முடிவு செய்யலாம் என்றும் சொல்லியிருக்கிறார்கள். இதற்காக நாம் அவர்களை பாராட்டவேண்டும் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI K. ANBAZHAGAN : கோதாவரி, கிருஷ்ணு தண்ணீரைத் தெற்கே கொண்டுவரவேண்டுமென்று முயற்சிக்கின்றபோது, கோதாவரி, கிருஷ்ணு நதிகளில் பெரு வெள்ளம் காரணமாக அங்குள்ள மக்கள் மிகவும் துன்பத்தில் இருப்பதால் இனிமேல் இவைகளைத் தடுக்க உடனடியாகச் சில திட்டங்களை போட்டு நிறைவேற்றுகிற இந்த நேரத்தில் அந்தத் திட்டங்களிலே கலந்து கொள்ள நமது சர்க்கார் முயற்சிக்குமா ?

THE HON. SRI P. KAKKAN : இந்த சமயத்திலே பேசுவது என்பது நல்லதல்ல. ஏற்கெனவேயே ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அவர்கள் ஆபத்தில் இருக்கும் சமயத்தில் நாம் நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று சொல்லுவது நல்லதல்ல.

* 222 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Public Works be pleased to state with reference to Question No. 16 answered on 27th June 1957, the present stage of the proposal to utilize the waters of the Godavari river for irrigation purposes in this State?

THE HON. SRI P. KAKKAN : The question of utilization of the waters of the Godavari and the Krishna for the benefit of the State was generally discussed and the matter was referred to the Chief Engineer, Andhra Pradesh, for a preliminary technical report. On receipt of that report the Zonal Council will consider the matter again.

### *Electric motors*

* 223 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) எத்தனை விவசாய மின்சார மோட்டார்கள் 1958-ஆம் ஆண்டில் பெறுவதற்காக அரசாங்கம் திட்டமிட்டுக்கொண்டிருக்கிறது ?

(ஆ) உள் நாட்டு உற்பத்தி மூலமாக எத்தனை விவசாய மின்சார மோட்டார்கள் கிடைக்கலாம் ?

(இ) இறக்குமதி மூலமாக எத்தனை விவசாய மின்சார மோட்டார்கள் பெறுவதற்காகத் திட்டமிடப்பட்டு வருகிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) About 15,000 numbers.

(*b*) About 50,000.

(*c*) Nil.

### *Births and deaths*

* 225 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) 1955 முதல் 1957 வரையில் நமது ராஜ்யத்தில் வருடவாரியாக ஜில்லாவாரியாக எத்தனை குழந்தைகள் பிறந்தன ?

(ஆ) எத்தனை இறந்தன ? (5 வயதுக்கு உள்பட்டது).

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) A statement[b] is placed on the table of the House.

[b] Printed as Appendix III on page 874 infra.